உ
சிவமயம்

முல்லைநகர்,

# சோமசுந்தர விநாயகர்,

# திருவிரட்டை மணிமாலை.

இஃது
முல்லைநகர் ஸ்தல வித்துவானும், சண்முகானந்தசபைப் புலவருமாகிய,
நகரம்,

**வே. முத்துவீருப்புலவர் அவர்களால்,**
இயற்றப்பட்டது.

ஷை சோமசுந்தர விநாயகர் கோவில் தர்மகர்த்தாவர்களில்,
முள்ளிக்குளம்,

**திருவாளர் சுந்தரக்கோனாரவர்கள் பொருளுதவியால்**

சங்கரநயினார்கோவில், "ஆனந்தா பிரஸில்"
பதிப்பிக்கப்பெற்றது.
1922.

சிவமயம்

முல்லைநகர்,

சோமசுந்தர விநாயகர்,

# திருவிரட்டை மணிமாலை.

இஃது

ஷை முல்லைநகர் ஸ்தல வித்துவானும், சண்முகானந்த சபைப் புலவருமாகிய,

நகரம்,

## வே. முத்துவீருப்புலவர் அவர்களால்,

இயற்றப்பட்டது.

ஷை சோமசுந்தர விநாயகர் கோவில் தர்மகர்த்தாவர்களான
முள்ளிக்குளம்,

திருவாளர் சுந்தரக்கோனாரவர்கள் பொருளுதவியால்

சங்கரநயினார்கோவில், "ஆனந்தா பிரஸில்"
பதிப்பிக்கப்பெற்றது.

1922.

உ

# முகவுரை.

நீர்வளமும் நிலவளமும் பொருந்திய தென்[illegible]க்கரைக் குறு[illegible] அப்புஸ்தலமாகிய தாருகாபுரத்தையும், பிருதிவி ஸ்தலமாகிய சங்கரநயினார் கோவிலையும், தன் பக்கமாகக்கொண்டு சிறப்புற்றோங்கும் முள்ளிக்குளம் என்ற முல்லை நகர்ப்பதியின்கண் கோவில் கொண்டருளிய ஸ்ரீசோமசுந்தர விநாயகரை நாடோறும் சென்று அடிபணியும் பக்தகோடிகள், எம்பெருமானைப் பூமாலை புனைந்து புகழ்ந்து போற்ற நாமாலை யிலாக்குறையை நாடுமன்பர் பலரும் தோத்திரப் பாமாலையால் அலங்கரித்து, பேரின்பத்தை அனுபவிப்பானுன்னி, பரம்பரையாய் வித்துவவமிசத்தைச் சேர்ந்தவரும், உள்ளும் புறமும் தமிழ் மணங்கமழும் உத்தம குணசீலரும், அன்பென் பாக அருளுருப்பாக இன்பு குணனாக இயைந்து நிலவுவருமாகிய, நகரம் நல்லிசைப் புலமை, திருவாளர் முத்துவீரு கவிராயரவர்கள் சோமசுந்தர விநாயகர் திருவிரட்டை மணிமாலை யென்னும் தோத்திரப் பாக்களாலாகிய நூலொன்று [illegible]யருளினர். ஒரு முறை படித்தாலே படிப்பவர் மனதில் பசுமரத்தாணிபோல் பதிவெய்தும். மேலும் இந்நூலிற் பல நூற்கருத்துகளும் சுருக்கியுணர்தற் குறித்தனவாகத் துலங்கலானும், சொல்லமைதி பொருளமைதி பெற்றிருத்தலானும் இந்நூலைப் பாமரபண்டித ரஞ்சித மெனவே சொல்லலாம். இந்நூல் வாசிப்பவரனைவரும் அதினின்றும் பெருக்கெடுத்தோடும் பக்தி ரசத்தையுண்டு தன் வயமின்றி பேரின்பத்தை யனுபவிப்பார்களென்பதில் சற்றேனும் ஐயப்பாடிலது.

இத்தகைய பெருமைசான்ற நூலொன்றை யாக்கி மானிடப் பிறவி யெடுத்த ஒவ்வொருவரையும் இருமையிலும் இன்பமெய்துதற்கு இரட்டை மணிமாலை யியற்றிய பேருதவிக்கு 'வையகமு வானகமும் ஆற்றலரிது'. இத்தகைய பாமாலைகள் இன்னும் பல பாடி பலரையும் உய்யுமாறு செய்ய நூலாக்கியோனாகிய பீடு சால்புலமை முத்துவீருக்கவிராயரவர்கட்கு தீர்க்க ஆயுளும் திடகாத்திரமும் அருள எம்பிரானாகிய சோமசுந்தர விநாயகப் பெருமானைப் பிரார்த்திப்போமாக.

முள்ளிகுளம்,
22—4—22.

S. இராமசுவாமி,
உயர்தர நான்காவதுவகுப்பு.

## சாற்றுக்கவிகள்.

இராமநாதபுரம்ஜில்லா திருப்புத்தூர்த்தாலூகா சிங்கம்புணரி,
மூத்துவடுகென நாம வியக்தம் உள்ள,

### திருவாளர் சேவகப்பெருமாள் உபாத்தியாயர் அவர்கள்

#### சொல்லிய நேரிசை யாசிரியப்பா.

---

சீர்வளர் பழனத் திசைவரி செழிப்பக்
காரிக லளகக் கடைசியர் களையாக்
கொண்டெறி கஞ்சக் குழூஉக்குரம் பழிய
விண்டுவ ணம்பெற வேமட்டேற்று
மதன்பெறு முல்லை மாநகர்க் கிறைபச்
சுதனுருக் கணவன் ஞெகை நாண்புரந்த
சேயிறை யிருமைச் சேவடிக்கடியார்
நோயிறை பெறுது நோக்குறு கருணைக்
கண்ணு னொணயினிக் காசினி மேலுருப்
பண்ணு னரவப் பணியவற் குஞ்சர
ணத்தா னத்தா ஞமகணை மகன்பா
வத்தானுகு வாகன மேலவன்

கரவிரு ளொதுக்குவர் காணாற் கருசுந்
* தரவிரு யகனெனுந் தற்பரன் ருளுட்
டேமய லொரீஇச் சிந்திப்பவர் நெடிலேஃ
தேமல ரானரு ச்சிப்பரம் மலர்தேம்
புதற்பெறு மெனமேற் புந்திபி ணைந்தமி
ருதத்தமி ழியமெனு மொண்மல ரானே
ஆன்றவர் பறைபத் தழகிறை சிந்தா
தேன்றுற வரியா தியமணஞ் சிறப்பப்
பணிமா முடிக்கொரு பாரமே விரட்டை
மணிமா லையென வணிந்தணிந் தனன்மேற்
சிகர வானவர்கோன் றிகழ்நகர் நோக்கி
நகரவான் வளங்கொ ணகரமா நகரான்
பாதக மலங்கள் பறிபடக் குமரன்
பாதக மலங்கள் பணிதல் பொய்த்தில்லான்
தரைமிசை மும்மைத் தமிழ்நயன் றெருண்டெள்
வரைதருக் ககனிடை வாங்குத லெதிர்ந்து
மின்னுறு முத்துவி ரப்ப
னென்னுமீப் பெயர்பெற் றில்குநா வலனே.

* எதுகைநய னோக்கி, நகரம் னகர மாத்திரிந்தது.

வடகரைத் தாணுபதிப் பொன்னம்பலம்பிள்ளை யவர்களின
மரபிலுதித்த ஊற்றுமலை ஜமீன் கீழக்கலங்கல்,
சுப்பிரமணியபிள்ளை யவர்கள் குமாரர்

## வித்வான் சங்கரபாண்டியம்பிள்ளை யவர்கள் இயற்றிய

### வெண்பா.

சுந்தரந்தங் கும்பழனஞ் சூழ்முல்லையூர்ச் சோம
சுந்தரவி நாயகன்றோட் கன்பணியாய்—மந்திரஞ்சேர்
பொங்கிரட்டை பாலைபுனைநதா னருள் பெற்றான்
எங்கள் முத்துவீரப்ப னே.

முள்ளிக்குளம் சண்முகானந்த சபையின் காரியதரிசியாகிய,

## திருவாளர், பா. சூரியம்பிள்ளை யவர்கள் இயற்றியது.

நத்திலகு முல்லைநகர் நற் சோம சுந்தரனும்
அத்திகரு முத்து வீரப்பனுமே—பத்திபதாய்ப்
பூமாலை யாரும் புனைவரென நூலுணர்ந்து
பாமாலை சொற் றான்பரிந்து.

---

செவ்வற்குளம்,

## திருவாளர் ஆ. கந்தசாமிப்புலவர் அவர்கள்,

இயற்றியது.

கோஙகரற் புதவளைகை மானு முல்லைநகர் செழிக்கக் குலவுமூர்த்தி
தானகரந் தருசோம சுந்தரவி நாயகனுஞ் சரதன் மீது
மாநகர முத்துவீ ருக்கவிஞ னிரட்டைமணி மாலை சொற்றான்
தேனகரம் மியமான பால்பழமு மிதற்கிணையாய்ச் செப்பற் பாற்
[றோ.

செவ்வற்குளம்,

## திருவாளர் இராமசுவாமிக் கவிராயரவர்கள், இயற்றிய

அறுசீர்க்கழில் நெடிலடி யாசிரிய விருத்தம்.

மதியமதின் மிசைதவழு மணிமாட மணியணியாய் வாய்ந்த முல்லைப்
பதியமரு முயர்சோம சுந்தரவி நாயகன்மேற் பத்திகூர்ந்து
பொதியமுனி வியந்திட நன் னகரமுத்து வீருகவிப் புலவன் செய்த
முதியதமி ழிரட்டைமணி மாலைவனப் பெம்மனோர் மொழியற் பாற்றோ.

சாற்றுக்கவிகள் முற்றும்.

---

உ

சிவமயம்

முல்லைநகர்,

# சோமசுந்தர விநாயகர்

## திருவிரட்டை மணிமாலை.

### காப்பு வெண்பா.

சீரிலகும் முல்லைநகர்த் தெள்ளமுதைத் தேவர்தொழும்
பேரிலகு வேதமுதற் பெம்மானைப்—பாரிலகு
நற்சோம சுந்தரவி நாயகனைப் போற்றிடுவோஞ்
சொற் சீர்ப்பாச் சொல்வான் றுணிந்து.

## நூல்.

### வெண்பா

ஏர்பொருந்து முல்லைநக ரெம்பிரான் தும்பிமுகன்
சீர்பொருந்தும் பாதமதைச் சிந்திப்பார்—பார்பொருந்தும்
பற்பலபோ கத்தின் பயனினிதா கத்துய்த்து
நற்புகழ்பெற் றுய்வார் நலம். (1)

### கட்டளைக்கலித்துறை.

நலமே விளங்க வடியேனைக் காத்தருள் நல்கிடுதித்
திலமே பரதர் குலக்கான் முளை திகழ் மாமலராற்
பலமே நிகர்திருப் பாதார்ச்சனைசெயப் பண்டவன்சஞ்
சலமே தவிர்த்தழி யாவின்பந் தந்ததயாநிதியே. (2)

வெண்பா

நிதியே பெருகி நிறைந்தோங்கும் முல்லைப்
பதியே குடிகொள் பரமா — நதிசேர்
மழுவலா னீன்ற மணியே மகிழ்ந்து
பழுதிலா மற்கடைக்கண் பார். (3)

கட்டளைக்கலித்துறை

பார்மேலு லோபர் மனைமிதியாதபண்பும் பரிவாய்ச்
சீர்மே லுலவுநின் பாதார விந்தந் தினந்தொழுநற்
பேர்மே லுலவு மடியவர் கூட்டம் பெறுமியல்புஞ்
சேர்மேற் பொருள்கல்வி யுந்தரு வாயருட் டேசிகனே. (4)

வெண்பா

தேசிகமெஞ் ஞானத் திரளே பொருட்பொலிவாம்
பூசிதமி குத்பரம புண்ணியனே — மாசில்
மறைமுடிவா னந்தமிகு மாணிக்க மேநற்
பிறைமுடிகொண் டாயருளன் பே. (5)

## திருவிரட்டை மணிமாலை.

### கட்டளைக்கலித்துறை

அன்பே முன்னுளி லயில்வேல் முருக னடவிசென்று
மின்போ லிடைவள்ளி தன்போகம் வேண்டி விரைமலர்த்தா
ளின்போ டிறைஞ்சக் கரியுரு வாய்வந் திசைவுசெய்து
முன்பே மணமுடித் தாயடி யேற்கருள் முன்னவனே. (6)

### வெண்பா

முன்னவனே யெவ்வுயிர்க்கு மூர்த்தியே முந்தொருகாற்
றென்னவனுய் வந்தரசு செய்தபிரான்—றன்னையனைப்
பெற்ற பெருமானே பெரும்பாச மங்குசங்கை
யுற்றவருட் டேனே வுரை. (7)

### கட்டளைக்கலித்துறை

உரையாக மங்க ளுருவாய வுண்மைகட் பாலுலவு
நிரையே நிராமய மேசச்சி தானந்த நித்தியமே
பரையா ளருள்திருப் பாலாவுனது பதாம்புயத்தைக்
கரைமீதி னிற்பணிந் தேனடி யேற்கருள் தற்பரனே. (8)

### வெண்பா

பரனே சுரர்க்குப் பகையா யுதித்த
வரணர் கடமுகத்து வல்லான்—வுரனை
அழிக்கவொரு கொம்பொடித்த வைந்துகர னேயெம்
வழித் தெய்வமே அருள் செய்வாய். (9)

### கட்டளைக்கலித்துறை

செய்வாய் மணிச்செந்நெல் கன்னலைப் போற்செழித் தோங்கியதிற்
செய்வாய் மணிவிளங் கும்முல்லைமாநகர் சேர்ந்திடுமைய
கையாய் நினது பதந்தொழு மன்பர் கணத்துக்கென் றுங்
கையாத முக்கட் கரும்பே கருணைக் கடலமுதே (10)

### வெண்பா

அமுதே யமுதத் தமர்ந்தசுவை யேசெங்
குமுதம் பழனங் குலவுங்—கமுகார்
திருச்சோலை சூழ்முல்லைத் தேவாயெ னுள்ளத்
திருப்போ யுனைப்பணிந்தேன் யான். (11)

### கட்டளைக்கலித்துறை

யானோ வுனதடியே னெந்த நாளுமருள் புரிவாய்
மானேர் விழித் தெய்வயானை மணாளன் மகிழ்ந்திடுமுன்
னோனே கருணைப் பெருங்கடலே வொருபோதுமற
வேனே உனதுநற் பாதாம்புய மென்னுடையவனே. (12)

### வெண்பா

உடையா வயனரன் மாலுற்று னது பாதத்
திடையார்வம் வைத் திறைஞ்சி யேத்தித்—தடையாது
மின்றி முத்தொ ழிற்றலைமை யெய்தினா ரெவ்வுயிரு
மொன்றி நிறைவான வுணர்வே. (13)

### கட்டளைக்கலித்துறை

உணர்வே பிரண வத்துட் போருளே ஒளியேய்ந் திடுமைந
துணரார் கடுக்கைபங் கண்ணியன் றோன்றல் சுகானந்தமெய்ப்
புணர்வே புரந்தரன் சாபந்தவிர்ந்திடப் பூமிசைவந்
திணரார் மலர்ப்பதம் போற்றியுய்ந் தானருள் ஏரம்பனே. (14)

### வெண்பா

எரம் பழன மிசைக்குலவு முல்லைநக
ரோரம்பன் பொற்பாத மேத்தினார்—வாரம்
புடை சூழுலகிற் பொருள்கல்வி செல்வந்
தடையின்றி யேயடைவர் தாம். (15)

### கட்டளைக்கலித்துறை

தானே அகிலமுதற் காரணப்பொருள் சர்வசுகந்
தானே கொடுக்குந் தயாபரன் றண்முல்லை யம்பதியிற்
தானே தனக்கு நிகராகுஞ் சுந்தரத்தந்திபதந்
தானே துதிப்பவர்க்குப் பெருவாழ்வது தங்கிடுமே. (16)

### வெண்பா

தங்குந் திருமுல்லைத் தண்பதிவாழன் பர்கட்குப்
பொங்குங் கருணைபுரி பூரணா—எங்கு
நிரந்தரமாய் நிற்கு நெடியோ யடியேற்
புரந் தருள்செய்வாய் புண்ணியா. (17)

### கட்டளைக்கலித்துறை

புண்ணியனே அருமாமறை தேடரும் பொற்சுடரே
மண்ணிடை நீயன்றிமற் றொருதெய் வத்தைவாழ்த் துகிலேன்
எண்ணிடு மெண்ணத் தையா தேனு மோர் குறைவின்றியருள்
தண்ணளி சேர்முல்லை யம்பதியென்னு நற்றுனத்தனே. (18)

### வெண்பா

தானம் பெறலாந் தவம்பெறலாம் புத்திரசந்
தானம் பெறலாந்தயை பெறலாம்—தானம்
பொழிகய முகற்குப் பொருந்து திருத்தொண்டு
கழுவிடுநற் பூசனைசெய் தால். (19)

### கட்டளைக்கலித்துறை

தாலந் தனிலுனைப் போலெவரே யருள் தந்திடுவார்
தாலந்தனை நிகர்த் தோங்குகையா யெழில்தங்கிடுநற்
பாலந்தனிற் றிருக்கண் ணுடையா யெம்பகவ சற்கோ
பாலன்றனி மருகா வென்னையாள் திருப்பண்ணவனே. (20)

## திருவிரட்டை மணிமாலை

### வெண்பா

பன்னவர்கள் போற்றும்பழம் பொருளை கன்னலின்சொல்
பன்னவனை மெஞ்ஞான பண்டிதனை — என்னுயிர்த்தாய்
முல்லையம் பதித்தலைவா முன்னேனே யென்னுமன்பர்க்
கெல்லையில் சீர் தந்தருளெந் தாய். (21)

சுபம்.

முற்றுப்பெற்றது.

---